## மேன்மைதங்கிய மகாராஜா ஐந்தாம்ஜார்ஜ்
## இந்திய சக்கரவர்த்தி யவர்கள்
# மகுடாபிஷேகச் சிறப்பு.

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

திருவோங்கு செயலோங்கு தேர்ந்தவறி வினையோங்கு
தேய மாகும்
உருவோங்கு மணிமாட முத்தமச்சி ராங்கிலர்தம
முயர்ச்சி காட்ட
வருமோங்கு துவசமென வானளவி நிரைநின்று
வளங்க ளார்ந்து
மருவோங்கு குழுமியரு மகிழவுறு மிங்கிலாந்தென்
வளமார் தேயம் (1)

உலகமெலாந் தமதினிய வுயர்செங்கோ னலமபெருக்கி
யோங்குமவண்ணர்
பலகலையின் றிறமார்ந்த பகருமதி மன்னவராம்
பண்பார் மேன்மை
அலகில்புக ழெனுங்கதிர னணியார்ந்த பரிதிகடா
மார்ந்து தோன்றும்
வலமுறுநல் லுதயமெனும் விரையாகி யத்தேயம்
வயங்கு மன்னோ (2)

**கலிவிருத்தம்.**

மண்ணுந் தனி விண்ணும்புகழ் வளமார்தரு மன்ன
நண்ணும்மெழிற் றிருநாட்டிடை நல்லோரெவர் களுமே

கண்ணுந்திரு வருளார்தரு கருணைக்கிட மிவனென்
றெண்ணும்படி யினிதுற்றன னியல்சார்ச்செனுமிறைவன் 3

கஞ்சம்பயி லெழிற்றோக்கினன் கமலாசன மகள்சே
மஞ்சம்பயில் வருமார்புறு மறையோதிறை யன்னோன்
பஞ்சஞ்சுறு பதமேரியென் பனிமாமொழி யிறைவி
நெஞ்சம்புள குறுநாயக னிகரில்லெம நரசே. (4

கலித்துறை.

விக்டோரி யாவென்னு மொமதன்பி னிதியான மேதக்கசீ
சாக்காலு மழியாத விசையன்னை நிகரென்ன வியல்
சீர்த்தியான்
தொக்கான பொருணூலின் றொகைமேயாடு கலமேவு
துறையாறது
மிக்காக வறிவுற்ற மிகுஞான சதுராள னிவன்மேன்மை
யாய் (5

ஒருபாலொ டோரோன்ப துறுநூறொ டொருபத்தோ
டொன்றெய்தியே
வருசோதி வருடத்தின் மதியெட்டொ டொருநாலு
மனுமாமதி
உருவாரு மந்தெய்தி யுடனூரு மிகுமேன்மை யுறுநாளே,
திருவாரு முடிசூடு தினமென்று பெரியோர்க டோர்ந்
தோதவே (6

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஒப்பிலாச் சீர்த்தி வாய்ந்த வொள்ளிய விந்தி யாவென்
இப்பதி தன்னில் யாரு மின்புற மேரி யென்னும்
அப்பணி மலரின் மேய வருட்டிரு மகளே யன்ன
செப்புநற் றுணைவி யோடு சேர்ந்தன னினிது மன்னோ 7)

தூயநன் னீரினாற்குத் தூயநீ ராட்டி வானிற்
றோயவே யார்ந்த வொப்பிற் றாமணி மண்ட பத்தில்
ஏயசெம் பொன்னி னாகி யெழின்மணி குயின்று காந்தி
மேயதாம் பொருவில் சீர்த்தி விளங்கரி யணை யொன்
றிட்டார் (8)

திருமகள் பாங்க ரோங்கச் சிறந்துவீற் றிருக்கு மால்போல்
உருவுறு மேரி யோடு மொண்புகழ்ச் சார்ச்சென் றோதுப
பெருமன்வீற் றிருந்தான் சீர்சால் பேசுமெய்ஞ் ஞான
மென்று
மருவுபேர்க் குரவ னெஞ்ச மகிழ்ந்தனன் புனைந்
தான் மௌலி. (9)

நேரிசை யாசிரியப்பா.

மேதகுலா மௌலி சென்னிகொண் டேனை
நேசமிக் குறுமெந் நீதியார் மன்னன்
துவக்கக் கல்விக் களித்தனன் றொகையா
உவக்கவே யைம்பா னிலக்க முருபாய்

ஈங்குழு தொழிலுக் கேற்றன புரிய
ஈந்தன ரூபா யிலக்கம் பலவே
அரசாங் கவுத்தி யோகத் தமர்ந்தாங்
கொருமதி வேதன மைம்பா னுரூபாய்க்
குட்படப் பெறூஉ மவர்க்கெலா மோங்குற
நட்புள மனமதிச் சம்பள நல்கினன்
வங்கா ளத்தின் பிரிவினை மாற்றி
அங்கு ளார்க்கெலா மளித்தனன் களிப்பே
ரண்புட னமர்ந்துதா னன்முடி சூடிய
வண்ணு நகர் டில்லியை வளநக ராக்கினன்
இன்னன பலநல மியற்றின னாக
மன்னிய விந்திய மாந்தர்தம் முளமெலாங்
கொள்ளை கொண்டனன் கோதில்
வள்ள லிவனையாம் வாழ்த்துதன் முறையே. (10)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

வாழ்க வாழ்க வெங்கள் சார்ச்சுச் சக்ர வர்த்தி வாழ்கவே
வாழ்க வாழ்க வெங்கண் மேரி யென்னும் ராணி வாழ்கவே
வாழ்க வாழ்க வெங்கள் பச்சை யப்பர் சீர்த்தி வாழ்கவே.
வாழ்க வாழ்க வவர்புரிந்த தருமம் நன்கு வாழ்கவே (11)

---

**இவை இந்நூலைத் திரட்டியவரும் பச்சைய முதலியார்**
காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய
**கா. ர. கோவிந்த ராஜ முதலியாரா லியற்றப்**
பெற்றவை

ஸ்ரீ

# நீதிச்செய்யுட்டிரட்டு.

## 1. கடவுள்.

### திருக்குறள்.

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது (1)

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில (2)

### திருவாய்மொழி.

உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்
மயர்வற மதிநல மருளினன் எவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனனே. (3)

### தேவாரம்.

ஆதி யானை யமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக் கண்டீர் தொழற்பாலதே (4)

கம்பராமாயணம்.

உலகம் யாவையுந் தாமுள வாக்கலு
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே (5)

கந்தபுராணம்.

திருவந்ததொல் லைப்புவனத் தொகுதேவர் போற்றிப்
பெருவந்தனை செய்தறிதற் கருட்பெற்றி யெய்தி
அருவந்தனை யுமுருவந் தனையுமன்றி நின்றான்
ஒருவன்றன துபதந்தனை யுளத்துள் வைப்பாம். (6)

## 2 பெற்றோரைப்பேணல்.

திருக்குறள்.

மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ் சொல். (1)

கம்பராமாயணம்.

நைந்தடி யற்ற வால நடுங்கிவீழ் கின்ற தென்று
வந்தவீ யூன்றி வீழா வகைநிலை விளக்கு மாபோன்
மைந்தர்க டமக்கு நல்ல வறிவினன் மகிழ்ந்து சேர்ந்து
தந்தையைத் தளரா வண்ணந் தாங்குவர் தவத்தி னென்
றான். (2)

நான்மணிக்கடிகை.

கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கொண்டானிற்
றுன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மைய வாய பொருளில்லை யீன்றாளின்
என்ன கடவுளு மில் (3)

ஆசாரக்கோவை.

வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை (4)

தனிப்பாடற்றிரட்டு.

ஈன்று வளர்த்த தாய்தந்தைக் கெவரே கைம்மா றியற்றி டுவார்
ஆன்ற மதலை நூறுவய தளவு மடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத் துள்ளபொருண் முற்று மளித்து முறைமுறையே
ஏன்று வழிபா டியற்றிடினு மொருநாள் வளர்த்தற் கிணை (5)

## 3. ராஜபக்தி.

சிந்தாமணி.

அருளு மேலர சாக்குமன் காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வ
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினு
மருளி யாக்கல ழித்தலங் காபவோ (1)

உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமா
லிறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வௌவவ தன்புறங் காக்கலார் (2)

புறநானூறு.

நெல்லு முயிரன் றே நீரு முயிரன் றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம் (3)

நீதிநெறி விளக்கம்.

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயு-மறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ
மிலைமுகப் பைம்பூ ணிறை. (4)

நான்மணிக்கடிகை,

மழையின்றி மாநிலத்தார் கில்லை மழையுந்
தவமிலா ரில்வழி யில்லை தவமும்
அரசிலா ரில்வழி யில்லை யரசனும்
இல்வாழ்வா ரில்வழி யில். (5)

## 4. குரவர் மாணவர் கடமை

### I குரவர் கடமை.

நன்னூல்.

ஈதலி யல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி
யுரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமின் மனத்தி னூல்கொடுத்த லென்ப (1)

### II மாணவர் கடமை.

(a) பாடங்கேட்டலின் முறை.

கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகி யவன்குறிப் பிற்சார்ந்து
இருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர். (2)

## (b) நூலைப்பயிலுமுறை.

நூல்பயி லியல்பே நுவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்த லென்றிவை
கடனாக் கொளினே மடநனி யிகக்கும். (3)

ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னாகும். (4)

ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே (5)

அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகாற்
செவ்விதி னுரைப்ப வவ்விரு காலு
மையறு புலமை மாண்புடைத் தாகும். (6)

## (c) மாணவன் வழிபாடாற்று முறை.

அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சி வழிபாடே (7)

## 5 முயற்சி.

### திருக்குறள்.

முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். (1)

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள். (2)

தெய்வத்தா னாகா தெனினு முயற்சி
மெய்வருத்தக் கூலி தரும் (3)

ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர் (4)

நாலடியார்.

இசையா தெனினு மியற்றியோ ராற்றால்
அசையாது நிற்பதா மாண்மை யிசையுங்காற்
கண்ட றிரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று. (5)

ஆசாரக்கோவை.

நந்தெறும்பு தூக்கணம் புட்காக்கை யென்றிவைபோற்
றங்கரும நல்ல கடைப்பிடித்துத்-தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பெற்றி யானும் படும். (6)

நீதிநெறிவிளக்கம்.

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே யுலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி. (7)

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்-செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (8)

குசேலோபாக்கியானம்.

மானிட னொருவன் றனக்கருஞ் செல்வம் வாய்க்கவென்
றுஞற்றின முயற்சி
தானுஞற் றவனேற் கடவுளு மதனைத் தந்தளிக்
குவனதா லன்றே
வானவ ரறிஞர் திருவினை முயற்சி யாக்குமம்
முயற்சியி லாமை
யீனமா ரின்மை புகுத்திடு மாலென் றியாருநன்
குணர்தர நவில்வார். (9)

செயத்தகு முயற்சி செய்திடிற் செயிர்தீர் செய்யவண்
மணாளனு மிரங்கி
வியத்தகு வேண்டு மியாவையு மளிப்பன் விளம்புறு
முயற்சிசெய் யானே

னயத்தகு போக மளித்திடா தென்று நானிலத்
    தறிஞர்கள் குரைப்ப
நயத்தகு நெறியா லடியுண லன்றே யோர்ந்தோர
    தலைப்பெருங் கடமை. (10)

## 6 கல்வி

### திருக்குறள்.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர் (1)

தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. (2)

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு (3)

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. (4)

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். (5)

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கல்லாரோ டேனை யவர். (6)

### நாலடியார்.

திரியழற் காணிற் றொழுப விறகி
னெரியழற் காணி னிகழ்ப - வொருகுடியிற்

கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றா
னிளமை பாராட்டு முலகு (7)

குஞ்சி யழகுங் கொடுந்தானைக் சேட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு (8)

இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணோங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து. (9)

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வார்
எச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சை மற்றில்லை பிற (10)

தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்-காணாய்
அவன்றுணையா யாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல். (11)

கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு-மெல்ல
விருப்பினு நாயிருந் தற்றே யிராஅ
துரைப்பினு நாய்குரைத் தற்று. (12)

## 7 வாய்மை

### திருக்குறள்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும். (1)

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன் (2)

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று (3)

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும் (4)

யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற (5)

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின், (6)

### நாலடியார்.

தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பின்
ஊன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க-வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல் (1)

சிறுபஞ்சமூலம்.

இன்மை நலனழிக்கு மச்சங் குறைபடுக்கு
மன்மை பெருநரகத் தாழ்விக்கு-மெய்ம்மை
மறந்தேயும் பின்று மலர்மகளை நீக்கு
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய் (8)

நீதிவெண்பா.

நீசரோ டீச னினையுங்கா றொற்றுமை
நீசனே நீச னவனேயே-நீசப்
புலையனு மென்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனென் றே புகல். 9

கம்பராமாயணம்.

வாய்மை யென்னுமீ தன்றி வையகத்
தூய்மை யென்றுமொன் றுண்மை சொல்லுமோ
தீய்மை தானதிற் றீர்த லன்றியே
யாய்மெ யாகவே றறைய லாவதே (10)

சிலப்பதிகாரம்,

வாய்மையின் வழாது மன்னுயி ரோம்புநர்க்
கியாவது முண்டோ வெய்தா வரும்பொருள் (11)

வில்லிபாரதம்

அண்ணிய கிளையு மில்லு மரும்பெரு மகவு மன்புந்
திண்ணிய சீரு மிக்க செல்வமுந் திறலுந் தேசு

பெண்ணிய பொருள்கள் யாவு மியற்றிய தவமு மேனைப்
புண்ணிய மனைத்துஞ் சேரப் பொய்மையாற் பொன்றா
மன்றே (12)

## 8 அடக்கம்.

### திருக்குறள்.

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
ஆரிரு ளுய்த்து விடும். (1)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு (2)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின் (3)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது (4)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து (5)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு (6)

தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு (7)

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து (8)

# 9 நட்பு

திருக்குறள்.

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு (1)

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும் (2)

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு (3)

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல் (4)

மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு (5)

நாலடியார்.

காதலார் சொல்லுங் கடுஞ்சொல் லுவந்துரைக்கு
மேதிலா ரின்சொலிற் றீதாமோ - போதெலா
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
ஆவ தறிவார்ப் பெறின். (6)

இன்னா செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானோவி னல்லது - துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது. (7)

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்-வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. (8)

கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே - நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீரமி லாளர் தொடர்பு. (9)

யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்-யானை
யறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேன்
மெய்யதா வால்குழைக்கு நாய் (10)

நான்மணிக்கடிகை.

பறைநன்று பண்ணமையா யாழி னிறைநின்ற
பெண்ணன்று பீடிலா மாந்தரின்-பண்ணழிந்
தார்தலி னன்று பசித்தல் பசைந்தாரிற்
றீர்தலிற் றீப்புகுத னன்று. (11)

புறநானூறு.

விளைபதச் சீறிடம் நோக்கி வளைகதிர்
வல்சிகொண் டளைமல்க வைக்கு
மெலிமுயன் றனைய ராகி யுடையதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொ

டியைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
வன்றவ னுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்
திருங்களிற் றொருத்த னல்வலம் படக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்
துரனுடை யாளர் கேண்மையொ
டியைந்த வைக லுளவா கியரோ (12)

## 10 நன்றி.

### திருக்குறள்.

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. (1)

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும் (2)

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (3)

### நாலடியார்.

தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர் - பனையனைத்
தென்றுஞ் செயினு மிலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு. (4)

கம்பராமாயணம்.

சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக்
        குருவைத் தெய்வப்
பதவியந் தணரை யாவைப் பாலரைப்
        பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா
        மாற்றன் மாயா
வுதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா
        முபாய முண்டோ. (5)

உதவாம லொருவன் செய்த வுதவிக்குக் கைம்மா றாக
பதயானை யனைய மைந்த மற்றுமுண் டாக வற்றோ
சிதையாத செருவி லன்னோன் முன்சென்று செறுநர் மார்பி
லுதையானே யுதையுண் டாவி யுலையானே யுலகின்
மன்னோ.

வில்லிபுத்தூரர் பாரதம்.

அரவ மல்கிய பதாகை யாய்மதி யமைச்சரா
        யரச ழிப்பினுங்
குரவர் நல்லுரை மறுக்கி னும்பிறர் புரிந்தநன்
        றியது கொல்லினு
மொருவர் வாழ்மனை யிலுண்டு பின்னுமவ ருடனழன்
        றுபொர வுன்னினு
மிரவி யுள்ளவு மதிய முள்ளவு மிவர்களே
        நரகி லெய்துவார் (7)

புறநானூறு.

ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
வறம்பா டிற்றே யாயிழை கணவ (8)

## 11. கொல்லாமை.

திருக்குறள்.

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும் (1)

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி (2)

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று. (3)

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. (4)

பெருந்தேவனார் பாரதம்.

ஆனை யடியி லடங்கா வடியில்லை
தானதுபோ னிற்கின்ற தன்மைதா-னூனுயிரைக்
கொல்லா வறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கு
மெல்லா வறமு மிசைந்து. (5)

தாயுமானவர்.

கொல்லா விரதங் குவலய மெல்லா மோங்க
வெல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே (6)

கொல்லா விரத மொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ வறியேன் பராபரமே (7)

வளையாபதி.

உலகுடன்வி ளங்கவுரு சீர்த்திநிலை கொள்ளின்
நிலையில்கதி நான்கினிடை நின்றுதடு மாறு
பலகிறுய ரஞ்சினுயி ரஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமி னென்றுநனி கூறினர றிந்தார் (9)

## .12 பெரியோரியல்பு

திருக்குறள்.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். (1)

ஆசாரக்கோவை.

பிறர்மனை கட்களவு சூது கொலையோ
டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார்-திறனிலரென்
றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்
செல்வழி யுய்த்திடு தலால் (2)

பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கு
மையந்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பி

னையம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும் (3)

படிறும் பயனிலவும் பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்று
மசையாத வுள்ளத் தவர் (4)

சீவகசிந்தாமணி.

உறுவர்ப் பேணலுவர்ப்பின்மை யுலையா வின்பந் தலைநிற்றல்
அறிவர் சிறப்பிற் கெதிர்விரும்ப லழிந்தோர் நிறுத்த லறம்
பகர்தல்
சிறியா ரினத்துச் சேர்வின்மை சினங்கை விடுதல் செருக்
கவித்தல்
இறைவ னறத்து ளோர்க்கெல்லா மினிய ராத
லிதுதெளிவே (5)

ஸ்ரீ பாத்துமோத்தர புராணம்.

கருமவன் பவத்தை மோகக் களிப்பினைக் கணக்கிற் றீமை
தருமொரு சினத்தைப் பொல்லாச் சர்ச்சையைச் சாய
னீக்க
வருமழுக் காற்றை நீங்கா மததனை மம்ம ரோங்கிப்
பெருகுற வளிக்குந் தீய பெட்பினைப் பேணல் செய்யார்.

களியினைக் கலியைப் பொய்யைக் காவினைக் காசி னேசத்
தெளிவினைத் தேற றன்னைத் தேசறு புலையைத் தேராத்
தலையினைத் தயத்தைப பொல்லாத் தாளினைத் தளரச்
செய்யும்
கிளையினைக் கேத மோதுங் கேட்டினைக் கிளத்த லாகார்(7)

கொலையினை வலைஞர் செய்யுங் கோளினைக் கோதென் றோதும்
மலையினை மிடிமே லுய்க்கு மானத்தை மகியி னாளும்
அலையினை யுடைய தாது மார்கலி யென்னுஞ் சன்ம
வலையினை வழங்குந் தீய வாக்கத்தை மதிக்க கில்லார். (8)

## 13. அன்பு.

திருக்குறள்.

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு. (1)

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம். (2)

அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. (3)

புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு (4)

அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. (5)

கம்பராமாயணம்.

என்பு தோலுடை யார்க்குமி லார்க்குந்தம்
வன்ப கைப்புலன் மாசற மாய்ப்பதென்
முன்பு பின்பின்றி மூவுல கத்திலும்
அன்பி னல்லதோ ராக்கமுண் டாகுமோ (6)

என்பென்ப தியாக்கை யென்ப துயிரென்ப
திவைக ளெல்லாம்
பின்பென்ப வல்ல வேனுந் தம்முறை
நிலையிற் பேரா
முன்பென்ப வுளதென் றூலு முழுவதுந்
தெரிந்த வாற்றல்
அன்பென்ப தொன்றின் றன்மை யமரரு
மறிந்த தன்றே. (7)

பிரபுலிங்க லீலை.

துறவற மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோர்
உறவொடு மகங்க டான மொண்டவம் விரதம் பூசை
அறிவினை யனைத்து மில்லை யாதர வில்லை யாயிற்
பெறுவன மெய்வருத்தம் பெரும்பொரு ளழிவு மன்றே

## 14. அருள்.

திருக்குறள்.

நல்லாற்ற ணாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. (1)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். (2)

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லாகி யாங்கு. (3)

கம்பராமாயணம்.

ஆவுக் காயினு மந்தணர்க் காயினும்
யாவர்க் கேனு மெளியவர்க் காயினுஞ்
சாவப் பெற்றவ ரேதகை வானுறை
தேவர்க் குந்தொழுந் தேவர்க ளாகுவார் (4)

சீவக சிந்தாமணி.

தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோன்
மன்னுயிர் வைகலு மோம்பி வாழுமேல்
இன்னுயிர்க் கிறைவனா யின்ப மூர்த்தியாய்ப்
பொன்னுயி ராய்ப்பிறந் துய்ந்து போகுமே. (5)

சூளாமணி.

கற்றவர் கடவுட் டானஞ் சேர்ந்தவர் கலைகளில்லார்
அற்றவ ரந்த ணாள ரன்றியு மனைய நீரார்க்
குற்றதோ ரிடுக்கண் வந்தா லுதவுதற் குரித்தன் றாயிற்
பெற்றவிவ் வுடம்பு தன்னாற் பெறுபய னில்லை மன்னே (6)

பெருந்தேவனார் பாரதம்.

இறப்ப நமக்கடுத்த வெவ்வநோ யாவும்
பிறர்க்குமஃ தாமென்று கொண்மி - னுறக்கருதி
யெவ்வா றுமக்குறுதி யெண்ணுதிர் நீ ரெல்லார்க்கு
மவ்வாறே யெண்ண லறம்.

### சிறுபஞ்சமூலம்.

பொருளுடையான் கண்ணதே போக மறனும்
அருளுடையான் கண்ணதே யாகு-மருளுடையான்
செய்யான் பழிபாவஞ் சேரான் புறமொழியு
முய்யான் பிறர்செவிக் குய்த்து. (8)

எவ்வுயிரு மென்னுயிர் போலெண்ணி யிரங்கவுநின்
றெய்வவருட் கருணை செய்யாய் பராபரமே (9)

தம்முயிர்போ லெவ்வுயிருந் தானென்று தண்ணருள்கூர்
செம்மையருக் கேவலென்று செய்வேன் பராபரமே (10)

## 15. ஈகை.

### திருக்குறள்.

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. (1)

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (2)

சாதலி னின்னாத தில்லை யினிததூஉம்
ஈத லியையாக் கடை (3)

### நாலடியார்.

உண்ணா னொளிநிறா னோங்குபுகழ் செய்யான்
றுன்னருங் கேளிர் துயர்களையான்-கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும். (4)

உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்-கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி. (5)

முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கு நோயுள-கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து. (6)

சிறுபஞ்சமூலம்.

கழிந்தவை தானிரங்கான் கைவாரா நச்சான்
இகழ்ந்தவை யின்புறா னில்லார்-மொழிந்தவை
மென்மொழியா னுண்மகிழ்ந் தீவானேல் விண்ணோரால்
இன்மொழியா லேத்தப் படும். (7)

பழமொழி.

வழங்கலுந் துய்த்தலுந் தேற்றாதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வந்-தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப வஃதன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம். (8)

## 16. கயமை

திருக்குறள்.

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. (1)

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். (2)

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில் (3)

அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ் (4)

நாலடியார்.

இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார் - தடங்கண்ணாய்
உப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறாப் பேய்ச்சுரையின் காய். (5)

பன்றிக்கூழ் பத்தரிற் றேமா வடித்தற்று
னன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைக்குங்காற்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோற் றலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு. (6)

தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றார்
ஏமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார் தாமயங்கி
ஆக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார். (7)

கப்பி கவட்டதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளைப்போவாக் கோழிபோன்-மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும். (8)

சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொல்-எக்காலு
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
இந்திரனா வெண்ணி விடும். (9)

சிறுபஞ்சமூலம்.

மாசு படினு மணிதன்சீர் குன்றாதாம்.
பூசிக் கொளினு மிரும்பின்கண்-மாசொட்டும்
பாசத்து ளிட்டு விளக்கினுங் கீழ்தன்னை
மாசுடைமை காட்டி விடும். (10)

பழமொழி.

மிக்குப் பெருகி மிகுபுனல் பாய்ந்தாலும்
உப்பொழிதல் செல்லா வொலிகடல்போன்-மிக்க
இனநல நன்குடைய ராயினு மென்று
மனநல மாகாவாங் கீழ் (11)

தேர்ந்துகண் ணோடாது தீவினையு மஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாஞ் சிறிதுரைத்துத்-தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பன செய்யு
நரகர்கட் கில்லையோ நஞ்சு. (12)

தொன்மையின் மாண்ட துணிவொன்று மில்லாதார்
நன்மையின் மாண்ட பொருள்பெறுத-லின்னொலிநீர்
கன்மே லிருந்து மலைநாட மாக்காய்த்துத்
தன்மேற் குணில்கொள்ளு மாறு. (13)

அறநெறிச்சாரம்.

கல்லா வொருவனைக் காரணங் காட்டினும்
இல்லைற் றென்று மறனுணர்த-னல்லாய்
நறுநெய் நிறைய முகப்பினு மூழை
பெறுமே சுவையுணரு மாறு. (14)

வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால வரிதாகு-மஃதேபோல்
வைகலு நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னு நெஞ்சு. (15)

மூதுரை.

வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்த விடதாரி
யாங்கதனுக் காகார மானாற்போற்-பாங்கறியாப்
புல்லறிவாளர்க்குச் செய்த வுபகாரங்
கல்லின்மே லிட்ட கலம். (16)

நீதிவெண்பா.

ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்க்கும் விடங்கொடுக்கில் வாழுமே-நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழுதும் விடமே யாம். (17)

கொட்புளதற் கைந்து குகிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே-வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (18)

## 17. சூது.

### திருக்குறள்.

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. (1)

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு. (2)

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். (3)

அகடாரா ரல்ல லுழப்பர் சூதென்னு
முகடியான் மூடப்பட் டார். (4)

உடைசெல்வ மூணொளி கல்வி யென்றைந்து
மடையாவா மாயங் கொளின் (5)

### திரிகடுகம்.

புலைமயக்கம் வேண்டிற் பொருட்பெண்டிர்த் தோய்தல்
கலைமயக்கங் கள்ளுண்டு வாழ்தல்-கொலைமுனிந்து
பெய்ம்மக்கஞ் சூதின்கட் டங்க லிவைமூன்று
நன்மை யிலாளர் தொழில். (6)

### அறநெறிச்சாரம்.

ஓதலு மோதி யுணர்தலுஞ் சான்றோரான்
மேதை யெனப்படு மேன்மையுஞ்-சூது
பொருமென்னுஞ் சொல்லினாற் புல்லப் படுமேல்
இருளா மொருங்கே யிவை. (7)

### நளவெண்பா.

அறத்தைத் தேவர்கள்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு-மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்.
நீண்டுவரோ வென்றார் தெரிந்து. (8)

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கு வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு-மருவு
மொருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (9)

### சீவக சிந்தாமணி

குழகராயிள மடந்தையர்க் குருகுவோர் குறிப்பிலா மையி
னாலும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடுக்குமா
றுணராமல்
அழகுபேரறிவாகவேகொண்டவரறத்தொழில்
புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்கள்ளுணவினிதே.

சீலநற் றருமமெய் சிதைக்குந் தெண்டிரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடு
மாலுறுத் திடுங்கவ றுடன் மன்னகேள்
கோலிழுக் கரசர்தங் கொள்கைத் தென்பவே. (12)

## 18. புறங்கூறாமை.

### திருக்குறள்.

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. (1)

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறு மாக்கந் தரும். (2)

கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். (3)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர். (4)

அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. (5)

### நாலடியார்.

கணமலை நன்னாட கண்ணின் றொருவர்
குணனேயுங் கூறற் கரிதால்-குணனழுங்கக்
குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்
கெற்றா லியன்றதோ நா. (6)

### பழமொழி.

உண்டின்ன ரென்று தமரையுந் தம்மையுங்
கொண்ட வகையாற் குறைதீர நோக்கியக்கால்
விண்டவரோ டொன்றிப் புறனுரைப்பா னஃதாத
லுண்டவிற் றீயிடு மாறு. (7)

அறிநெறிச் சாரம்.

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினுங்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்-பின்னின்
றிழித்துரைக்குஞ் சான்றோரை யஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை. (8)

பொல்லாது சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கு-நல்லாய்
மணலின் முழுகி மறைந்து கிடக்கு
ஞணலுந்தன் வாயாற் கெடும். (9)

வளையாபதி.

ஆக்கப் படுக்கு மருந்தளை வாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்குங்
காக்கப் படுவன விந்திரிய மைந்தினும்
நாக்கல் லதில்லை நனிவெல்லு மாறே, (10)

## 19. சிற்றினஞ் சேராமை.

திருக்குறள்.

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். (1)

நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு. (2)

மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல். (3)

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். (4)

நாலடியார்.

உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை-தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும். (5)

ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ-தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு. (6)

உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரப் புணருமா மின்பம்-புணரிற்
றெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய். (7)

மனத்தான் மறுவில ரேனுந் தாஞ்சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்-புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
யெறிபுனந் தீப்பட்டக் கால். (8)

### அறநெறிச்சாரம்.

குற்றத்தை நன்றென்று கொண்டு குணமின்றிச்
செற்ற முதலா வுடையானைத் தேற்று
அறிந்தாரென் றேத்து மவர்களைக் கண்டாற்
றுறந்தெழுவர் தூய்க்காட்சி யார். (9)

### நீதிவெண்பா.

நிந்தையிலாத் தூயவரு நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தர்மிடத்தே நிற்குமே —நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் றன்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுலரோ பார். (10)

### கம்பராமாயணம்.

உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்ததன் னுதிர முற்றிச்
சுடருறச் சுட்டு வேறோர் மருந்தினாற் றுயரந் தீர்வர்
கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கருமமன்றான்
மடலுடை யலங்கன் மார்ப மதியுடை யவர்க்கு மன்னோ

### ஆரியப்பப் புலவர் பாகவதம்.

சீலமுற் றுயர்ந்தவர்ச் சேரின் வீடுறும்
மாலையுற் றறிவிலார் மருங்க டைந்திடின்

வேலையுற் றிலதுரும் பென்ன வெம்பகைக்
கோலமுற் றிறந்திறந் துழலல் கூடிரால். (12

## 20. பொருட்சிறப்பு.

### திருக்குறள்.

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். (1)

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு (2)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். (3)

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. (4)

### நாலடியார்.

வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதா னெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகிற்
போகாதெறும்பு புறஞ்சுற்றும்-யாதுங்
கோடாஅ ரெனினு முடையானைப் பற்றி
விடாஅ ருலகத் தவர். (6)

நான்மணிக்கடிகை.

கல்லிற் பிறக்குங் கதிர்மணி காதலி
சொல்லிற் பிறக்கு முயர்மத-மெல்லென்
அருளிற் பிறக்கு மறநெறி யெல்லாம்
பொருளிற் பிறந்து விடும். (7)

நல்லார்க்குந் தம்மூரென் றூரில்லை நன்னெறிச்
செல்வார்க்குந் தம்மூரென் றூரில்லை-யல்லாக்
கடைகட்குந் தம்மூரென் றூரில்லை தங்கைத்
துடையார்க்கு மெவ்வூரு மூர் (8)

நீதிநெறிவிளக்கம்

இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா-வென்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற. (9)

நல்வழி

கல்லானே யானாலுங் கைப்பொருளொன் றுண்டாயின்
எல்லாருஞ் சென்றங் கெதிர்கொள்வ - ரில்லானை
இல்லாளும் வேண்டாண்மற் றீன்றெடுத்த தாய்வேண்
டாள்
செல்லா தவன்வாயிற் சொல்.

கம்பராமாயணம்.

சூரியர் தமைவேந் தாக்கும் புவிபுரப் பிக்குந் துய்க்குஞ்
சீரிய வுண்டி சேர்க்குந் தேவர்தம் முலகம் போக்குங்
காரிய மனைத்துங் கூட்டுங் கருதலர் தம்மை வாட்டுங்
கூரிய திதன்மே லில்லை கொழும்பொனீர் கொண்மி
னென்றான். (11)

சீவகசிந்தாமணி.

வென்றி யாக்கலு மேதக வாக்கலுங்
குன்றி னார்களைக் குன்றென வாக்கலும்
அன்றி யுங்கல்வி யோடழ காக்கலும்
பொன்றுஞ் சாகத்தி னப்பொருள் செய்யுமே. (12)

பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத்துன் னாதன வில்லையே. (13)

செய்கபொருள் யாருஞ் செறுவாரைக் செறுகிற்கு
மெஃகுபிறி தில்லையிருந் தேயுயிரை யுண்ணு
மையமிலை யின்பமறனோ டவையு மாக்கும்
பொய்யில்பொரு ளேபொருண்மற் றல்லபிற பொருளே

வளையாபதி.

குலந்த ருங்கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைக ளழிபசி நீக்கு
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருடாப் புன்கண்மை யுண்டோ.

குசேலோபாக்கியானம்.

கோதறு கல்வி சாலூர் குடியிருந் தறியா னேனும்
ஓதரு செல்வ மிக்கோ னொருவனே சிறந்தோ னவன்
காதலின் வேத முன்றுங் கலைகள்கற் றுணர்ந்தா னேனுந
தீதமை மிடி யனையிற் சிறந்திட்டான் சிறிதுந் தானே

முற்றிற்று